உ

குருவே துணை

# இரத்நசைலக்கடவுள்

# யமகவந்தாதி

சிரவணபுரம்

கௌமாரமடாலயம்

ஸ்ரீ கந்தசாமி சுவாமிகள்

இயற்றியது

சுக்கில ௵ இடபரவி.

உ

குருவே துணை



இரத்தினாசலம்

ஸ்ரீ விநாயகக்கடவுள்

# சாத்துகவிகள்

சிரவணபுரம் கௌமார மடாலயம்

## ஸ்ரீமத் - கந்தசாமி சுவாமிகளியற்றிய

### கட்டளைக்கலித்துறைகள்

மறைவிளக்குந்தண்ட பாணியனின்பகௌ மாரவருண்
முறைவிளக்கஞ்செ யிலக்கியனுகி முதிர்ந்தநலந்
தறைவிளக்கத்தோன் றியவிராமானந்த சற்குருதா
ளுறைவிளக்கங்கொளென் முன்சுந்தரத்தவ வோங்கலனே.

அமரர்கள்வாழ்த்த விரத்தினவெற்பி லமர்கருணைக்
குமரன்புயத்திற் புனையும்பதிகங் குளிர்கடம்பார்
பமரங்களின்பினிற் பாடியொற்றுகிப் பவவினைக
ணமர்கட்ககற்றற் கொருதுணையாய்ப்பய னல்குமன்றே.(உ)

---

சிரவணபுரம் கௌமார மடாலயம்

## ஸ்ரீ சின்னசாமி சுவாமிகள் இயற்றிய

### கட்டளைக்கலித்துறைகள்

உலகொன்றிருட்பவ மோடக்கருணை யொளியுருக்கொண்
டிலகெங்குருபரன் றுளிணைபோற்றி யிருடுணித்தோன்
கலகஞ்செய்மாயைக் கடலமிழ்வார்க்குக்கை யாமலகத்
தலகின்மெஞ்ஞான மருள்கந்தசாமி யணித்தவனே. (க)

வளத்திற்பொலிகொங்கின் மாமணிக்குன்றிடை வாழ்குமர
னுளத்திற்குவப்புறச் சொன்மாலையாதிய வுற்றுணர்வார்
தளத்தின்மலிபோ தினன்யமன்மாரன் றனக்கஞ்சிடா
ரளப்பிறவத்தமிழ்ப் பெட்டகமாயரு ளண்ணுவரே. (உ)

---

சிரவணபுரம் கௌமார மடாலயம்

## ஸ்ரீ இரங்கமுத்துஐயா அவர்கள் இயற்றிய

### கட்டளைக்கலித்துறைகள்

பாரோங்குமாந்தர்கள் யாவருமாயைப் பரவைகடந்
தேரோங்குசிற்குணக் குன்றேறிடவரு ளேதிரண்ட
காரோங்குசோலைச் சிரவைராமானந்தக் காவலன்மெய்ப்
பேரோங்குகாதல னுங்கந்தசாமிப் பெயர்த்தவனே. (க)

கொங்கார்கொங்கார்பொழிலோங்குமிரத்தினக்குன்றமர்ந்த
சிங்காரவேற்கும ரன்களித்தேற்றிடச் செப்புசந்த
மங்காதன்மாலை யமகமுறையீ டமரர்கரந்
தங்காரமுத மெறிந்தேசுவைக்குந் தகையினவே. (உ)

---

சிரவணபுரம் கௌமாரசபை அடியவர்களிலொருவரான
கணபதிக் கிராமம்

## ஸ்ரீ கண்ணப்பசாமியியற்றிய

### அறுசீர்விருத்தங்கள்

சீர்மலி கொங்குநாடு செய்தவப் பயனுவந்த
பார்புக ழிராமானந்த பரமசற் குருதாளுன்னி
யேர்பெறு மிரத்தினச லக்கும ரன்றேட்கேற்ற
வோர்சந்தம் யமகப்பாவு முலப்பிலா மாலையாதி. (க)

இகபரத் துள்ளோருய்ய விரக்கமே வடிவாய்வந்த
சுகப்ரம வமிசமான தூயநற் கந்தசாமி
யகமகிழ்ந் தருளைக்கொண்டிங் கறைந்தணிந் தனனிஃதாலே
மிகநல மநுட்டிப்போர்க்கு விளைவது சரதமாதோ. (உ)

---

சிரவணபுரம்

கௌமாரசபை அடியவர்களிலொருவரான

## ம-ா-ா-ஸ்ரீ இராமசாமி செட்டியார் இயற்றிய

### வெண்பாக்கள்

தன்னிகரில் சற்குரவன் றன்கமலக் கண்ணருளான்
மன்னிரத்தி னக்கிரிவாழ் மாயூரன்—றன்னைமிகப்
போற்றுசந்த மாலை புகன்முறையி டின்யமக
மாற்றுயர்ந்த பொன்னன் மணி.

தவக்கந்த சாமி தருநூ னுழைவா
ருவக்கும் புலமைசித்தி யுற்றே—நிவக்கும்
பெருமை மிகவனையும் பெற்றியினல் விண்ணோர்
தருநிகரா மேலாகுந் தான்.

---

திருவாமாத்தூர்க் கௌமார மடாலயம்

தி. மு. செந்திநயகம் பிள்ளையவர்கள் குமாரர்

## தி. செ. முருகதாசபிள்ளையியற்றிய

### அறுசீர்விருத்தங்கள்

சீர்த்திமலி கொங்கினுயர் சிரவணமா புரியிலருட் செம்பொன்மன்றி, னேர்த்திபெறத்திகழுமிரா மானந்தக் குருபரன்று ணிதமும்போற்று, மார்த்திமிகுமடியவரிற் சிறந்த

கந்தசாமிமுனி யன்பான்முன்னுள், கார்த்திகை மின்னார்
தனப்பா னுகர்குகன்வாழ்மலையினத்துட் கனசீர்தோய்ந்து.

இமையவரும்போற்றுசிர வணநகரத்தருகிலொளிரிரத்
தினப்பேர்ச்,சிமையமிசை யமர்முருகோன்மீதுசந்தப்பதிக
மொன்றுந் திகழ்பல்சீல, மமையநிகழ்குருமணிமாலையுஞ்
சநிதிமுறையீடு மன்பர் நெஞ்சங், குமையவுறுமியமக
முடன் கணநாதன் பதிகமொன்றுங் கூறினனே. (உ)

அதுவன்றிச்சுந்தரமா முனிபதிகமொன்றுசெவ்வேட்
கறைந்தான்யாவும், விதுவொன்றுபொழில்புடைசூழ் கண
பதியூர்க்கொருதவமா விளங்குஞ் சீலன், பதுமன்கைப்
பொறிவலியா னடராசனெனுநாமம்படைத்துவாழ்வோன்,
மதுரங்கொடன்பர்சொல வச்சிலிட்டுப்புத்தகமா வழங்கி
னனல். (௩)

முற்றிற்று

தெய்வமேதுணை.

———

உ

குருவே துணை

# யமகவந்தாதி

## காப்பு

### கட்டளைக்கலித்துறை

மணிக்கலந்தாதி யென்மின்பொன்னவாமிக வாய்ந்துசுப்ர
மணிக்கலந்தாதிய னீபமொத்தேகொள வண்டமிழான்
மணிக்கலந்தாதியொன் றேதற்குளமிக வாஞ்சையுற்றே
மணிக்கலந்தாதி மகாதேவகாத்தருள் வைத்தளியே.

## நூல

### கட்டளைக்கலித்துறைகள்

மாதங்கவத்திரன் சோதரகாமர் மருவுவிற்றேய்
மாதங்கவத்திர னேத்தியற்சீர்கொண் மணிவரைப்பூ
மாதங்கவத்திர மிப்பாமுடலொழி வைகல்பிர
மாதங்கவத்திர மாற்றுதருள்பத வாரிசமே. (க)

வாரிசந்தம்புகல் கொண்டாரெழுத்தழி மாண்கொளருள்
வாரிசந்தம்புகல் பாடல்கள்யாவு மகிழ்ந்தருளால்
வாரிசந்தம்புழு கார்தோளிடங்கொண் மணிக்கிரியாய்
வாரிசந்தம்பு பெருகப்புரிநின் வரையிடத்தே. (உ)

வரையன்னவாக னரியிமையோர்களை வாட்டுதகு
வரையன்னவாக முதற்சட்டியுட்செற்று வான்கரிதன்
வரையன்னவாக ணேமணிவெற்போனை வழுத்திடிற்சு
வரையன்னவாக நிலைதேர்ந்தடங்கு மதிவருமே. (௩)

மதித்தற்கரிய புகழ்தோய்மணிவரை வள்ளலவ
மதித்தற்கரிய வழிப்போந்துநெஞ்ச மயங்குபுதா
மதித்தற்கரிய மலத்தடைந்தெய்த்தனன் மல்கருளான்
மதித்தற்கரிய னுணர்யானெனவென்முன் வந்தருளே. (௪)

வந்திரதத்துவ சந்தனைவாழ்த்துபு மாதரைத்தை
வந்திரதத்துவ சந்தீர்கதிக்கென் வயக்குவிர்த
வந்திரதத்துவஞானம்பொலிய மணிவரையு
வந்திரதத்து வமைதீர்கவியின் வழுத்துமினே. (௫)

வழுவமையாக்கவிப் பாராணவத்தின் மலங்குமெனை
வழுவமையாக்கவிட் டெய்க்கவைத்தாயுனை வண்டமிழால்
வழுவமையாக்கவி கொண்டேத்தச்செய்யரன் மானமைத
வழுவமையாக்க விரத்தினக்குன்றவை வேலரசே. (௬)

வையாகரண முதற்கலைகற்று மலம்பொதிகு
வையாகரண மறியாரிற்றீர்த்தபி மானம்விட்டு
வையாகரண மொழிந்தார்கொளின்ப மணிக்கிரியுள்
வையாகரண மமைந்தநின்றுளின் மருவிடமே. (௭)

மருவந்தபங்கய வாவியிரத்தின மால்வரைக்கா
மருவந்தபங்க நலமிசையுங்கவு மாரருடன்
மருவந்தபங்கனி வாற்புரிகின்றில மன்மதன
மருவந்தபங்த மடைந்தேநமற்கென் வயக்குவமே. (௮)

வயக்கந்தருமணி யூரிந்திரற்கு வழங்கிமகள்
வயக்கந்தரும்மணி தோய்பாவையாயின்ப மல்கநல்கி
வயக்கந்தருமணி வெற்பினெந்தாய்கவு மாரர்செல்லும்
வயக்கந்தரும ணிமையோர்கள்வாழ்த்தும் வளம்பெறவே.

வளப்பந்திகழும வேளேவவாடி வயங்கிடைது
வளப்பந்திகழும்ம மத்தார்கட்கொண்டுழல் வாஞ்சைசிகா
வளப்பந்திகழும மற்றுடுங்கொண்டன் மருவுபொழில்
வளப்பந்திகழு மணிக்கிரியோயுன்கன் மன்னநல்கே. (கO)

மன்னவராகமு மன்னமுங்காண்கிலர் மாவரத்தான்
மன்னவராகமு தர்க்கிகலோர்பெற்ற வாழ்வறுத்த
மன்னவராக முலப்பிலிலக்கர் மணிக்கிரியாய்
மன்னவராக முதற்குணமெற்கற மாற்றுதியே. (கக)

மாற்றலரானவை யிந்தியக்கள்வர்கள் வையகத்தே
மாற்றலரானவை யுற்றேன்மணிவரை வள்ளன்மிகு
மாற்றலரானவை முற்றேங்குதாண்முடி வைத்தெனிடை
மாற்றலரானவை யேவானரிபோர் வகைப்படவே. (கஉ)

வகையமிதப்பல வாங்கவிகொண்டுனை வாழ்த்திடுந்த
வகையமிதப்பட வேய்ந்தெதுபோழ்தினும் வாய்ந்தவுள்ளு
வகையமிதப்பற வாழ்ந்திடச்செய்வாய் மணிவரையாம்
வகையமிதப்ப கலத்தினமேவிட மாட்சிமையே. (கங)

மாட்சிமையத்திருக் காகன்றருந்துயர் மாற்றியொப்பின்
மாட்சிமையத்திருக் காராயுமீசன் வலம்பொலிகா
மாட்சிமையத்திருக் கானந்தக்கோலத்தை மாமணிநா
மாட்சிமையத்திருக் கோயிலிற்காண வழங்குதியே. (கச)

வழக்குப்பலாயிரத் தஞ்செறிவாய்வந்திம் மண்ணிடந்த
வழக்குப்பலாயிர மித்தார்ந்துழன்றிந்த மானிடத்தே
வழக்குப்பலாயிரத் துங்கொடெப்பேம்வாய்ந்தனமணிக்கல்
வழக்குப்பலாயிரந் தெய்துதும்பாமென் மடநெஞ்சமே. ()

மடங்கலமையந்த மார்துணேயென்ன வருந்திநெஞ்சே
மடங்கலமையந்த ரஞ்சார்மணிவரை வாய்ந்துவிதி
மடங்கலமையந்த வேலோனடிகள் வழுத்திடிற்க
மடங்கலமையந்த ரித்தாரில்வாழும் வளந்தருமே. (௧௬)

வளத்தந்தவாக னகவேலநீனிற மாமதத்த
வளத்தந்தவாகன னன்பதத்தோங்கிட வைத்தருளும்
வளத்தந்தவாகன மார்மணிவெற்பில் வயங்கிடும்ப
வளத்தந்தவாகன வொப்பாமிவ்வாழ்க்கை மயக்கறவே. ()

மயக்கத்தடங்கத் தனங்காட்டுமாதர வாவொடுஞ்ச
மயக்கத்தடங்கத் தணந்தின்பதீத மருவிடுவான்
மயக்கத்தடங்கத்த ரோராவிரத்தின மால்வரைச்சி
மயக்கத்தடங்கத் தடங்காமெய்காண முன் வந்தருளே. ()

வந்தந்தகன்மறத் தூதர்கொளாமுனம் வான்மலய
வந்தந்தகன்மலர்ச் சோலைமணிக்கிரி வாணவுள்ளு
வந்தந்தகன்மதிக் கண்பெற்றிலங்க வழங்கிநற்சி
வந்தந்தகன்மன நின்றுளிற்றங்கிட வைத்தருளே. (௧௯)

வையத்திருந்த மிதம்படச்சூரன் மனங்கன்று
வையத்திருந்த நுவன்மணிவெற்பருள் வாரிதிதான்
வையத்திருந்தநவைகுறிப்பான்கொன்மெய்வன்னிசொற்சு
வையத்திருந்தமி ழாற்றுதிப்பீரின்ப வான்றருமே. (௨௦)

வானத்திருக்கு மரிகோன்றனதருள் வண்ணமுணர்
வானத்திருக்கு மறியா னென்றெய்த்தலொர்மாத்திரைதீர்
வானத்திருக்கு மறமகட்கேங்கருள் வாரியென்சு
வானத்திருக்கு மனமேமணிவரை மன்னினனே. (உக)

மன்னவராக்கந் தரநிழல்போலும்விண் மண்ணினையாண்
மன்னவராக்கந் தரமாதலின்று மகிழ்ந்துபணி
மன்னவராக்கந் தரநேரிரத்தின மால்வரைக்கண்
மன்னவராக்கந் தரவேட்பவர்க்கெண் மனக்கவியே. (உஉ)

மனக்கவிப்பாய்ச்ச லடக்கெளிதோவன்று வானவர்தாழ்
மனக்கவிப்பாய்ச்ச லமைந்ததுமாபலி மாடமைவா
மனக்கவிப்பாய்ச்சல சன்பதந்தோய்மணிமால்வரைப்பான்
மனக்கவிப்பாய்ச்ச லறத்தயைநீரருள் வாரிதியே. (உங)

வாரிக்கருணை யெளியேன் விழியெதிர் வந்து தமிழ்
வாரிக்கருணை யினிலளித்தாங்குன் மலர்க்கரத்தால்
வாரிக்கருணை புரிவாய்சரண்புன் மடுத்தமைகோ
வாரிக்கருணை வளமணிக்கற்றுவர் வன்னத்தனே. (உச)

வன்னம்பதிவியன் கீர்த்தியவாயருண் மாட்சிநன்னூல்
வன்னம்பதிவிலர்க் கூடாதெற்குற்ற மனமென்மொழி
வன்னம்பதிவிரை விற்சுகமெய்துவை வள்ளிமின்கேள்
வன்னம்பதிவிண் மணிக்கிரி நின்னுள் வதியவையே. (உரு)

வதிவிலங்கல்லனம் பூருகுழன்முலை மாநடையு
வதிவிலங்கல்லன விற்றேய்ப்புவகையர் மாடுறும
வதிவிலங்கல்லன வைதீர்மணிவளைவாணபக
வதிவிலங்கல்லன கக்கங்கையோன்கு மரகுருவே. (உசா)

மரணக்கலக்கந் தவிர்த்தாடியென்றன்பின் மாமணிச்சே
மரணகலக்கந் தனிற்பதியாய்மருண் மாதர்கள்கா
மரணக்கலக்கந்த மீட்டிநொந்தேங்குபு மற்றவர்கா
மரணக்கலக்கந் தனிற்சொக்கினுயுய்யும்வண்ணமெதே(உஎ)

வண்ணத்திசைக்கவி நாயகன்வேதன் வழுத்துநின்சீர்
வண்ணத்திசைக்கவி பற்பலபாடிடும் வாஞ்சையனிவ்
வண்ணத்திசைக்கவிழ் வெய்தியுள்வாடன் மரபுகொல்செவ்
வண்ணத்திசைக்கவி ஞர்மணிக்கற்கொடி வாரணனே. ()

வாரணந்தந்த தவமகள்செம்பொன் மணிப்பணிநீள்
வாரணந்தந்த நிகர்தனந்தோய்மண வாளமெய்ம்மூ
வாரணந்தந்தவ மாமணிவெற்பவை வன்புலர்த
வாரணந்தந்த மவாவினிலோட மருண்டனனே. (உகூ)

மருண்டிக்கடத்தி னலிவாருட்புக்கவர் மங்கையர்க
மருண்டிக்கடத்தி லுறச்செயமாய மருவியத
மருண்டிக்கடத்தின நோவேனெனைமணி மால்வரைந
மருண்டிக்கடத்தி லுலையேலென்றுன்னிடை வைத்தருளே.

வைத்தவித்தம்பு விடுமதனுலிள மங்கைநல்லார்
வைத்தவித்தம்புவி மாலுறுமென்மன மாசறத்து
வைத்தவித்தம்புத மார்மணிவெற்பநின் மாணடிசு
வைத்தவித்தம்புத னேர்தகையோருண் மருவநல்கே. (௩௧)

மருமத்தையம்பு படவேவிடுமன் மதனையட்ட
மருமத்தையம்பு படர்சடையார்க்கு மகிழ்ந்துசொன்மெய்
மருமத்தையம்புவி யிற்சுழல்வேற்கும் வகுத்தருள்கா
மருமத்தையம்புக ராம்பன்மணிவரை வானவனே. (௩௨)

வானம்பவனி முதலாகினுய்மழை மாரியிலூர்
வானம்பவனிக மோடுற்றுச்சூரை வதைத்தகன
வானம்பவனி யுணரென்றுபோகி மகன்றகைதோய்
வானம்பவனிதையர்நடுத்தோன்றிம்மணிக்கல்லினே. (௩௩)

மணிவாசகத்தன் மகிழக்குருந்தடி வைகினன்கண்
மணிவாசகத்த வருண்மேனிகொண்டு வயங்குமலே
மணிவாசகத்தபம் போன்றுருட்கூட்டி மலக்குதுன்ப
மணிவாசகத்தமை யாதருணின்பொன் மலர்ப்பதமே(௩௪)

மலராதனத்தந்த ணன்விதிப்பட்டென் மனமலத்தான்
மலராதனத்தந்த வத்தோய்ந்திரத்தின மாடடைந்தேன்
மலராதனத்தந்த மேவிடக்கௌவு மயிற்பரிமேன்
மலராதனத்தந்த வென்றுடியென்கண்முன் வந்தருளே. ௩௫

வந்தனந்தந்த மகிடற்குற்றுரெனு மாதரையு
வந்தனந்தவிப் பெய்திச்சகத்தின் மருண்டுநெஞ்ச
வந்தனந்தந்தவ மற்றுரையற்றுன் மணிவரைக்கண்
வந்தனந்தனம் வந்தனநல்குன் மணப்பதமே. (௩௬)

மணப்பதமத்தகைத் தூலஞ்சுகித்திட மாதரைக்கொண்
மணப்பதமத்த ருடன்கூடினேன்மன மாசறவே
மணப்பதமத்த னபயமணிக்கிரி வாணநின்பொன்
மணப்பதமத்த மணேத்தாரிற்சேராய் வருத்திடலே. (௩௭)

வருத்தங்கெடுத்தரு மன்பார்த்திடுமுன் வரம்பறுமென்
வருத்தங்கெடுத்தரு மைக்கவுமாரர் மருவுநின்முன்
வருத்தங்கெடுத்தரு வாச்செய்தருடியான் மாக்களென்க
வருத்தங்கெடுத்தருள் வான்மணிக்குன்றின் மருவினனே.

மருத்துவனண்டல ரைத்தாக்கவீர மகேந்திரமேய்
மருத்துவனண்ட முகட்டுய்க்குந்தேரில் வதிந்தருளு
மருத்துவனண்டமை யாவியிரத்தின மால்வரையாய்
மருத்துவனண்டனத் தந்தீர்த்தருள்பது மக்கழலே. (௩௯)

மக்களித்தாரணி மேல்வாழத்துன்பம் வரம்பறத்த
மக்களித்தாரணி யத்தாம்விலங்கினன் மார்க்கம்விட்டு
மக்களித்தாரணி யுட்கூட்டலன்றன்னை வாழ்த்திடவெ
மக்களித்தார ணிரத்தினவெற்பன் வழங்கினனே. (௪0)

வழக்குப்புரியட்ட காயஞ்செய்தால மருவினன்ற
வழக்குப்புரியவ ரேயினமென்றிருண் மாயைபெரு
வழக்குப்புரிய வயர்ந்தேன்மணிவரை வாணவிப்பொய்
வழக்குப்புரிய கவுமாரர்க்கூட மதித்தருளே. (௪௧)

மதித்துக்கடலை விடமெழவானோர் மருண்டனர்தா
மதித்துக்கடலை யிடச்சுதைநல்கருள் வள்ளலையுண்
மதித்துக்கடலை யிபமாவரச்செய்து வள்ளியுட்சம்
மதித்துக்கடலை வவிரத்தினமா மலையவனே. (௪௨)

மலையானிலத்திர தத்தூரும்வேள்பூ மழைபொழிந்து
மலையானிலத்திர சாதலரும்பர் வணங்கநன்க
மலையானிலத்திர சத்திரவீறுறு மாட்சிமணி
மலையானிலத்திர நெஞ்சம்படைத்தவிர் மாதவர்க்கே(௪௩)

மாதவரந்தமி ரேர்குழலார்பொய்ம் மயக்கெனத்தீர்
மாதவரந்தமி லோர்சூழ்மணிவரை வாணபிர
மாதவரந்தமி யேன்வேண்டிலனரை வாரிசந்தோய்
மாதவரந்தமி ழாலுனைப்போற்ற வரையச்செய்யே. (௪௪)

வரையனந்தத்துறக் கத்தினும்விம்ம வளர்ந்திலங்கும்
வரையனந்தத்து நடிக்குமணிவரை வள்ளலையுள்
வரையனந்தத்து ணலியுநெஞ்சேமலர் வாழ்பிரமன்
வரையனந்தத்துவி தானந்த மீந்திடும் வல்லையினே. (௪௫)

வல்லபந்தந்த முலைமடவாரே வலிலமைக்க
வல்லபந்தந்த ழையமெலிந்தேற்கு மணிவரைதோய்
வல்லபந்தந்த முலையூட்டுசேயவன் மாயைவெல்லும்
வல்லபந்தந்தடி யேன்றனைத் தோய்கவு மாரரினே. (௪௬)

மாரதவத்திருக் காளரிற்றீர்த்தருண் மாண்கொள்கவு
மாரதவத்திருக் காரணர்க்கூட்டி மணிவரைக்கு
மாரதவத்திருக் காட்சியகம்புற மன்னிடநின்
மாரதவத்திருக் காட்சிகொடாண்முடி வைத்தருளே. (௪௭)

வைத்தியநாதன் குருவேயிளமங்கை மாரிதழ்ச்சு
வைத்தியநாதன் வழுவறநின்மெய்ம் மகிமையிற்று
வைத்தியநாதன் பெறும்பேறுறச்சிர மாடு நின்றாள்
வைத்தியநாதன் மணிக்கிரியின்கண் வளர்மணியே. (௪௮)

வளப்பந்தரங்கக் கடல்விழிசேப்புற வானிடைது
வளப்பந்தரங்கருள் வள்ளிமின்னுளின்ப மாற்றமென்னை
வளப்பந்தரங்கதிர் தோய்மணிக்குன்றின் மருவிலின்ப
வளப்பந்தரங்கமொத் தேயோங்கிநாடொறு மல்கிடுமே. ()

மலங்கும்பிட்டுள்ளதுன் பத்தனையுந்தர வாடியுன்க
மலங்கும்பிட்டுய்ய நினைந்தேனுடைவையை வாயடைக்கா
மலங்கும்பிட்டுண்டவன் மைந்தமணிவரை வள்ளலென்றன்
மலங்கும்பிட்டுப்படச் செய்சூரனைச்செற்ற வன்மையனே.

வன்ணாச்சிரமத் தகைவிட்டவம்புரி வண்டரஞ்ச
வன்ணாச்சிரமத் தமைந்தேகவிகள் வகுத்திடியில்
வன்ணாச்சிரமத் தராற்றிடச்செய்ய வழங்கிடுவாய்
வன்ணாச்சிரமத் தடந்தோண்மணிவரை வாசத்தனே. (௫௧)

வாசக்கடம்பணி தோண்மணிக்குன்ற மருவியதே
வாசக்கடம்பணி கொண்டான்றருமகள் வாடச்சக
வாசக்கடம்பணி செய்துநின்றாட்டொழும் வள்ளலென்சு
வாசக்கடம்பணி யச்செய்துகொண்டருள் வைகலென்றே.

வைகைத்தரங்க ணியல்விழிமங்கையர் வாயிதழ்ச்சு
வைகைத்தரங்கணி மைப்படுமாணிக்க வாசகற்கா
வைகைத்தரங்கணி மண்சுமந்தான்சேய் மணிவரையாய்
வைகைத்தரங்கணித் தேனின்கண்யானுத வாய்விரைந்தே.

வாயாரப்பாடி யிரத்தினக்குன்றக்கு மாரனருள்
வாயாரப்பாடி யுறவோர்சலித்திட மாண்டளற்றின்
வாயாரப்பாடி ஞமலியிற்கேழலின் மன்பிறவி
வாயாரப்பாடியம் மாடியென்றாயிருண் மாட்டரன்றே. (௫௪)

மாட்டேனமட்டி மதியேனல்லோர்கொண் மரபமைய
மாட்டேனமட்டினி லேன்பவங்தொட்டுன் மலர்ப்பதத்தின்
மாட்டேனமட்டிக லார்புலத்தெய்த்துன் மணிவரையின்
மாட்டேனமட்டி ருபதஞ்சிரத்தில மைத்தருளே. (௫௫)

மைத்தண்டருக்கவின் காவீசனத்தில் வயங்கியணி
மைத்தண்டருக்கன் களைதீர்மணிவரை வாணவென்சு
மைத்தண்டருக்கன் விதியிற்றொழியநின் மாணடிய
மைத்தண்டருக்கரி தாம்பேறருளெண்ணல் வன்மமதே.

வன்மந்தரமிலன் மேலமையேல்சுதை வந்தெழுவான்
வன்மந்தரமிசை வோர்கீரசாகர மாட்டுவந்து
வன்மந்தரமிடுந் தன்மையிலெம்மணி மால்வரையாய்
வன்மந்தரமிலங் குந்தாட்டுணையென் மனத்தமையே. (ருஎ)

மனவாசகத்துக் கரியாயிரத்தின மால்வரைசான்
மனவாசகத்துக் கவிர் துணையாமருள் வள்ளல்வெங்கா
மனவாசகத்துக்க நல்கலிற்சால மயங்கினன்ருண்
மனவாசகத்துக் கருமமுற்றற்றுற மங்கலமே. (ருஅ)

மங்கலப்பாவினம் யானோதன்முற்றுநின் மாமலர்த்தா
மங்கலப்பாவியன் மார்பிலணிந்தென்று மண்ணிடத்தே
மங்கலப்பாவிதந் தோய்வான்மணிக்குன்ற வாணவுன்ச
மங்கலப்பாவி கொளப்புரிமாயை மறங்கெடவே. (ருகூ)

மறவாவரவினந் தாலமொப்பாம்புலன் மாற்றியென்று
மறவாவரவினந் தாரமுதந்தர வள்ளிபின்சென்
மறவாவரவினந் தாமதமாமணி மால்வரைக்கண்
மறவாவரவினந் தாவச்செயவுண் மதித்தருளே. (கூ0)

மதியம்பரவம் புனைவேணியர்தவ மைந்தரவ
மதியம்பரவம் புவிமாலறக்குரு வாவிளம்பு
மதியம்பரவம் புணராமணிவரை வாழ்த்துநர்க்கு
மதியம்பரவம் புயத்தாடரல்பிர மாதமன்றே. (கூக)

மாதிரத்தத்தின ரல்லற்பிணியற வான்கருணை
மாதிரத்தத்தின ரக்கத்துதித்தவ மாசினஞ்சார்
மாதிரத்தத்தின ரற்றவுவேல மணிக்கிரிப்பூ
மாதிரத்தத்தின ரந்தேசுறவருண் மாதவமே. (கூஉ)

மாதவளக்கரி தன்பெயரெங்கும் வழங்கிடச்செய்
மாதவளக்கரி யக்கத்துளத்தின் மறவர்குல
மாதவளக்க ரிடத்தின்மணிக்கலின் வாழ்வை பிர
மாதவளக்க ரிணைத்துயர்தீர்வைத்து மாதயவே. (சூங)

தயவாயிரங்கத் திருவுளங்கொண்மணிச் சைலவொன்று
தயவாயிரங்கதி ரோனிகர்மேனியுந் தண்டருஞ்சு
தயவாயிரங்க னவிராழிபூண்டவன் றூரமுட்ப
தயவாயிரங்க விடுமயிலேந்தியென் றன்கண்முன்னே. (சூச)

தனவாசையம்புவி பெண்ணுசையாதிய தாங்கமன்ம
தனவாசையம்புக ரொங்தேன்றிருமணிச் சைலவன்ன
தனவாசையம்புகு நின்றூட்குறப்புரி தானவர
தனவாசையம்பு யகோததிமானத் தழைக்குமுன்னே(சூரு)

தழைக்கைக்கொடிய வணிமதுராபுரி சாரிருண்மெய்த்
தழைக்கைக்கொடிய வமணீசரைக்கழுத் தங்கவைத்த
தழைக்கைக்கொடிய வரதனவெற்பவ தையலரி
தழைக்கைக்கொடியவ னின்புற்றமையநின் றூளருளே. சூசூ

தாளங்கடுக்க வருந்தனத்தார்நகை சாவமைவார்
தாளங்கடுக்க வருந்தகைத்தாகுஞ் சகத்தினிர்வே
தாளங்கடுக்க வருந்தசையிமணிச் சைலனின்பத்
தாளங்கடுக்க வருந்தல் கடலின்சு தைக்கொக்குமே. (சூஎ)

தைக்கக்கருமன் மதன்கணைபாசமஞ் சன்கையிற்ப
தைக்கக்கருமத் துழன்றயர்வேற்குநின் றண்டமிழ்த்தத்
தைக்கக்கருமந் தரங்கத்தும்வைத்தநின் றஞ்சபதத்
தைக்கக்கருமரு வாதருள்வாய்மணிச் சைலத்தனே. (சூஅ)

சயிலத்திருத்தலை யின்பமென்பீர்நலந் தாங்கருள்விச்
சயிலத்திருத்தலை வன்போலுமேன்மைத் தவத்தின்மணிச்
சயிலத்திருத்தலை வாழ்வாருளெண்ணிலச் சங்கொடுவெ
சயிலத்திருத்தலை யுற்கதத்தெறும்பெனச் சாற்றினரே. (சுகூ)

சாற்றிக்கவிபல மட்டின் சுவையுட் டதும்பநிதஞ்
சாற்றிக்கவிபல நின்பதஞ்சூடிடத் தந்தருள்வாய்
சாற்றிக்கவிபல வாச்சியங்காட்சி தனுமறைத்துச்
சாற்றிக்கவிபல நன்குணர்த்தும்மணித் தானத்தனே (எ0)

தானத்தனதன வென்னநிற்சந்தத் தமிழ்த்துதிசெய்
தானத்தனதன மேற்றேயுலோபந் தழைத்தநரர்த்
தானத்தனத னருச்சுனனென்பர்முற் றூழ்த்தன்மணித்
தானத்தனதன சிற்சுகமோங்கிடத் தந்தருளே. (எக)

தந்தக்கரிமுகன் சோதரகன்மிசை தாங்கிடமி
தந்தக்கரிய கடனீந்திஞேன்புகழ் சார்துணைவா
தந்தக்கரியன் மனைக்கீயிரத்தின சைலபதந்
தந்தக்கரிதய மேலமைப்பாயித் ததியுவந்தே. (எஉ)

ததியாய்ச்சியரகந் தோறுங்கரவினிற் றூனருந்து
ததியாய்ச்சியரவப் பாயோன்மருக சகமிசைசந்
ததியாய்ச்சியரவப் பந்தமற்றேமணிச் சைலவிது
ததியாய்ச்சியரவ யுற்றேங்கவைத்தனை தாக்கணங்கே. எங

தாக்கணங்காக நிறச்சூர்சம்பவஞ் சாற்றவிண்ட
தாக்கணங்காகன் மருகாவிரத்தின சைலத்தனே
தாக்கணங்காக வருள்புரிவிண்ணிறை சார்வதும்போ
தாக்கணங்காக நிலாவிடுநின்மெய்த் தரிசனமே. (எச)

தரிசனங்கண்ட முறப்புகன்மாற்றந் தணந்துதவாத்
தரிசனங்கண்டதும் பிக்களித்தேமணிச் சைலமிசை
தரிசனங்கண்டமை யப்புரிமுன்கே சவன்விடுஞ்சு
தரிசனங்கண்டத் தணிந்தாற்குந்தந்த தயாநிதியே. (எ௫)

தயாபரவாதவ கோடியொத்தேமணிச் சைலமொன்று
தயாபரவாதவ ருக்கரியாயரி சாற்றருட்க
தயாபரவாதவ சந்தீர்ந்துனதுபொற் றுளிடைசி
தயாபரவாதவ நேர்பத்திஞானந் தருதியின்றே. (எ௬)

தருவந்தரத்த ரழுந்துயர்தீர்தரச் சங்கரநித்
தருவந்தரத்த நிகர்கண்ணிலாமணிச் சைலகசி
தருவந்தரத்த வருட்பேறுற்றேறங்கத் ததிகடிதே
தருவந்தரத்தம் பொழிகணின்பப்புன றந்திடவே. (எஎ)

தந்தந்தனமதி வத்திரமென்றிளந் தையலர்க்குத்
தந்தந்தனமதி கெட்டலைவீர்மணிச் சைலனைவி
தந்தந்தனமதி யக்கெண்ணிவாழ்த்துமின் றக்கமெய்ப்போ
தந்தந்தனமதி லூர்வான்விதியுந் தவிர்க்குமன்றே. (எ௮)

தவித்தங்கனைய ருதரத்தின்மீட்டுஞ் சனிப்பிடுப
தவித்தங்கனைய சுநசிக்கிலேன்மணிச் சைலவன்பு
தவித்தங்கனையர விந்தப்பதமுடி சார்த்தியுட்போ
தவித்தங்கனையயி லேந்தியவள்ளி தவத்தவனே. (எ௯)

தவத்தரணிக்கு ளகமெலிந்தேன்கட் டயவுவைத்துத்
தவத்தரணிக்கு ளொருவனென்றேறதுந் தகைமையையு
தவத்தரணிக்கு ளமைகுருவாகிமுற் சார்ந்தருள்போ
தவத்தரணிக்கு மலிமணிவெற்பமை தற்பரனே. (௮0)

தற்பரசங்க ரிகுமாரவான்குஞ் சரிவளிகா
தற்பரசங்க ரிமருகரத்தின சைலவெனத்
தற்பரசங்க ரிடங்கூட்டிமாய்தல் சனிப்பறுமு
தற்பரசங்க ரியசிபதத்தினுட் டங்கவையே. (அக)

தங்கத்தலக்க ணரமாதர்போகந் தனிலெரிப்ப
தங்கத்தலக்க ணமைவான்மகம்புரி சண்டிகண்ம
தங்கத்தலக்க ணவர்த்தீர்த்திரத்தின சைலநின்ப
தங்கத்தலக்கண மோடவைத்தாணின்றஞ் சந்தஞ்சமே. ()

சந்தத்திருக்கவி பற்பலசூட்டுவன் சஞ்சலவ
சந்தத்திருக்கவி யாமாந்தர்தம்மைத் தமரெனவ
சந்தத்திருக்கவி டேன்மணிவெற்பவிர் தற்பரசெஞ்
சந்தத்திருக்கவி வேகங்கெடுத்தலிற் றுனுவந்தே. (அங)

தானந்தருமங் களேச்செய்திலேன்வினைச் சார்வுறுநி
தானந்தருமங்க முற்றேனிரத்தின சைலசந்நி
தானந்தருமங்க ளப்பிரசாதச் சரதசச்சி
தானந்தருமங்க முட்கொண்டிலேனென் சனிப்பவமே. ()

சனிப்பவசங்கடக் கண்டலேசாய்த்தறத் தாழ்த்திடுவஞ்
சனிப்பவசங்கடர் வேலேயிலுந்துந் தரங்கநிகர்
சனிப்பவசங்கடப் பேன்கொலிரத்தின சைலநின்றஞ்
சனிப்பவசங்கடம் வீழாமுன்மேவத் தயவுசெய்யே. (அரு)

தயக்கமலத்தரங் கத்தான்மனஞ்சஞ் சலித்தலறத்
தயக்கமலத்தரங் கப்புனல்போன்றது சண்டனது
தயக்கமலத்தரங் கட்டவிழ்த்தன்பருட் சாகரச்சு
தயக்கமலத்தரங் கத்துமணிவரைச் சண்முகனே. (அசு)

சண்டனவத்தை யமையாமையிற்சித்த சன்பிரமன்
சண்டனவத்தை யடையாரெக்காலத்துஞ் சாதலில்பு
சண்டனவத்தை யநுபவத்தார்மணிச் சைலபிர
சண்டனவத்தை யருட்சொருபந்தேர் தகையினரே. (அஎ)

தகைதாங்கிலேன்மும் மலத்தயர்ந்தேனஞ்ச றந்தருட்கந்
தகைதாங்கிமேனிலே சேர்கவுமார சரதபெருந்
தகைதாங்கியற்றெண்ட ருள்ளத்திடைவெண் சசிதிரிப
தகைதாங்கிளர்சடை யோனேர்மணிவெற்பிற் சாரினனே.

சாரணக்கும்பிடுங் கைத்தொண்டுடையர்சை வம்பொலியச்
சாரணக்கும்பிகப் பாடுகந்தன்மணிச் சைலமிறைஞ்
சாரணக்கும்பிற வுந்தோய்ந்துமாப்புட் டகையர்களாய்ச்
சாரணக்கும்பி யிடைக்கிடந்தேசஞ் சலிப்பவரே. (அகூ)

சலிலங்கனல்கம் புவிவளியாமணிச் சைலன்முன்னஞ்
சலிலங்கனவிர தத்தொண்டர்தாட்டுக டாங்கினம்பூ
சலிலங்கனமப் பயலேயுனக்கினிச் சற்றுமுள்ளஞ்
சலிலங்கனவொப் பதுவாழ்வென்றேருஞ் சரதத்தமே.

சரதத்திருப்புக ழூற்போற்றுவனுனைச் சற்றெனைவஞ்
சரதத்திருப்பு மனமோர்ந்தொழுகிடத் தள்ளுமவ
சரதத்திருப்பு கவருணின்பாதஞ் சரண்முருகே
சரதத்திருப்பு னிதமணிவெற்பருட் சாகரமே. (கூக)

சாகரந் தந்திமை யோர்தவமெய்க்குஞ் சரிமணிவி
சாகரந்தந்தி கழுந்திருமேனியைத் தன்னருட்கண்
சாகரந்தந்திட வுண்டனள்பூரித் தனவிருகு
சாகரந்தந்தி டையமரரொப்பத் தளர்ந்ததுவே. (கூஉ)

தளவரவிந்த முகஞ்சூலமைமைச் சலதரகுந்
தளவரவிந்த சுகத்தர்கணின்புறச் சார்தரல்பா
தளவரவிந்த முதநல்குமென்றணை தன்மைதள
தளவரவிந்த விரத்தினத்தோங்குகந் தப்பமெய்யே. (௯௩)

தப்பனந்தம்புரி வேணுயினுமின்பு சார்ந்துளம்வி
தப்பனந்தம்புரி யுற்றோருங்கிரத்தின தாபரகந்
தப்பனந்தம்புரித் தாக்குவன்காக்குஞ் சரதமென்கை
தப்பனந்தம்புரி வெய்தச்செய்வாய்சோ தனைசெயலே. ()

தனையனந்தாரணி மின்னைரெனுஞ்சக சாலமில்லே
தனையனந்தாரணி யீர்கவுமாரர்க டாள்புனைசு
தனையனந்தாரணி வோன்குமரன்மணிச் சைலனென்மைந்
தனையனந்தாரணி மைந்தனெனக்குச் சரக்சல்லவே. (௯௫)

சரமந்தவிரத் திருவனமாதர்த் தழுவுமவ
சரமந்தவிரத் திருவருள்செய்வான் றலந்தருங்குஞ்
சரமந்தவிரத் தினசானுமானத் தயங்குமவ
சரமந்தவிரத் திசைலத்தோங்குஞ் சகசத்தனே. (௯௬)

சகத்திருக்குந்துய ரத்தனையுஞ்சுகத் தன்மைசெய்வஞ்
சகத்திருக்குந்து மடமாதர்சம்பவந் தாண்டவென்னெஞ்
சகத்திருக்குந்து முடித்தாளருள்வள்ளித் தாய்கொளும்வ
சகத்திருக்குந்துரு வாகன்றுணைமணித் தாபரனே. (௯௭)

தாபரசங்கம சென்மங்கெடவுன் சரிதபிர
தாபரசங்கம மார்முகினனுங் தகையினிற்ச
தாபரசங்கம லப்புனல்போன்றனந் தாவுமணித்
தாபரசங்கம நின்றுளிலாக்குதி தஞ்சம்வந்தே. (௯௮)

தஞ்சந்திருக்கம லத்தாட்கடிமை தவாமல்வந்து
தஞ்சந்திருக்கரு ணைக்கம்வைத்தேவினை சார்புடன
தஞ்சந்திருக்கவ மாயையைநீற்றுதிர் தாபதர்நித்
தஞ்சந்திருக்கறை வான்மணிவெற்பினெந் தந்துணையே.()

தந்திரமாரண மாமுடியென்மணிச் சைலமுள்வி
தந்திரமாரண ணைதுநஞ்சிர்த்தியைச் சாற்றுநலந்
தந்திரமாரண மெய்தாச்சொருபத் தகையுணரத்
தந்திரமாரண முந்தருவீர்விண்மா தங்கத்தரே. (௧௦௦)

முற்றிற்று

## நூற்பயன்

### கட்டக்களைத்துறை

அந்தாதியல்பங் கயமாதர்நோக்க மமையுமென்றும்
அந்தாதியமன் பிரமன்மதன்புரி யல்லல்சற்றும்
அந்தாதிரையன் குமரன்மணிவெற் பமையமக
அந்தாதிநூறு முணர்ந்தோதிடுமெய் யடியவர்க்கே.

### வாழிவிருத்தம்

வாழிவான் பசுக்கள்கற்பு மாதர்மா தவர்கண்மன்னர்
வாழிநல்லிரத்தினப்பேர் வரைவரை மகணன்மைந்தர்
வாழிமெய்ப் பணிகளாற்றும் வாஞ்சையர் மான்மியங்கள்
வாழியெம் மிராமானந்த வள்ளலன் படியர்வாழி.

பரமசற்குருநாதன்றுணை

மெய்யடியார்திருவடிகளேசரணம்.

